உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

சிதம்பரம்

# ஸ்ரீ நடராஜவள்ளல் பதிகம்.

## சிவகாமசுந்தரி பதிகம்.

---

இவை

சென்னை, ப்ரீசர்ச்சுமிஷன் ஸ்கூல்

தமிழ்ப்பண்டிதர்

**சூ - சுப்பராயநாயகரால்**

இயற்றப்பட்டு,

திருநெறித்தமிழ்வேதபாராயண பக்தஜனசபையின்

காரியதரிசியாகிய

**கா - இரத்தினப்பிள்ளையவர்களால்**

வெளியிடப்பட்டன.

விய௵ மார்கழிமீ.

PRINCE OF WALES PRESS.

உ

சிவமயம்.

---

# சாற்றுக்கவி.

இஃது,

## பா. கங்காதரதேவரால்

இயற்றப்பட்டது.

---

### விருத்தம்.

எங்கும்வியாபகவியாப்பியமாகியேகமகண்டிதமேகெ
டிச்சாஞானக்கிரியாவடிவாயெண்ணிலுயிர்க்குயிராய்
திங்களருக்குத்தும்பைமிலைச்சியசெஞ்சடிலப்பெருமான்
திகழ்தருசிவகோடிகளுய்வான்சிற்றம்பலமேவுஞ்
சங்கரன்குஞ்சிததாண்டவமாடுந்தற்பரன்பொற்றாளைச்
தண்ணருளாஞ்சிவகாமசவுந்தரிதன்னிகர்பொன்னடியைப்
பங்கமில்பண்ணைபதிகப்பாவாற்பாடிப்பரவினனால்
பத்தர்பதந்தொழுசுப்பராயனெனும்பார்புகழ்பாவலனே.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# சிதம்பரம்

# ஸ்ரீ நடராஜவள்ளல்பதிகம்.

---

## கற்பகவிநாயகர் துதி.

நேரிசை வெண்பா.

அம்புலிசூ ரும்புரிசை யாருந் திருப்புலியூர்
எம்பெருமான்மேற்பதிகமீண்டுரைக்க - வெம்புகொடுங்
கற்பகமேவல் விட்டருளொங் கந்தருக்கு முன்பிறந்த
கற்பகயா னைப்பதமே காப்பு.

## நூல்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

திருவளர்கமலத் தவனுமாலவனுந் தேடுதற்கரியசெஞ்சட-
ர-, மொருவனேயடிய ருளங்கனிந்தேத்த வோங்குதாண்டவஞ்
செய்யமுதே, கருவளர்பிறவிக் கடையனேனின்முன் கருதிடாச்
சிறியனே னெனினுங், திருவருள்புரிய வேண்டுமால் தில்லைத்
திருச்சிற்றம்பலத் திகழ்தேவே (௧)

காம்புறழ்பணைத்தோட் காரிகையார்தங் கண்வலைப்பட்டுளங்கலங்கி, ஏம்பலுற்றுழலு மெளியனேன்றனக்கு மின்னருள்புரிவையென் றடைந்தேன், பாம்பொடுபுலியும் பணிபுகற்புலியூர்ப் பதியமர்ந்தருள்பசுபதியே, தேம்பொழிற்கடுக்கைச் சடையனே தில்லைத் திருச்சிற்றம்பலந்திகழ்தேவே. (௨)

அடியவர்புகழ் கற்றுங்கெரியோம்பி யாதியமூவர்தமுறையும், கடிமலர்ப்பொழில்சூழ் வாதவூர்முனிவர் கனிந்தவாசகத்திருமறையும், விடமெனக்கருதிப் படிமிசைத்திரியும் வீணரோடுறவுகொண்டுழலும், செடியனேன்றனையாண் டருள்செயவேண்டும் திருச்சிற்றம்பலந்திகழ்தேவே. (௩)

. என்றுநீயுளமற்றன்றெனையுடையா யாதுமென்றனைப்பிடித்தாட்டுந், துன்றியமலமு முளவெனக்கூறுந் துணிபிஃதுன்னையாமன்றே, அன்றுதொட்டிந்நாள் வரையுமத்தருவை யணுகிலேன்கொடுமலவழியே, சென்றனனின்றே யடைந்தனனருள்வாய் திருச்சிற்றம்பலந்திகழ்தேவே. (௪)

எந்தையெம்பெருமானேழையேனின்றாட் கியம்பும்விண்ணப்பமொன்றுண்டால், பைந்தொடியாரை நினைதருள்விரவாட் படிறரைநினைதடியவர்மேல், நிந்தனைபுரியுங் கொடியரையடியேனெஞ்சகங்கனிந்தவருறவைச், சிந்தனைகனவி லுஞ்செயாதருள்வாய் திருச்சிற்றம்பலந்திகழ்தேவே. (௫)

வீமனேயெனவுஞ் சோமனேயெனவும் விறல்கெழுவிசயனேயெனவுங், காமனேயெனவுங் கன்னனேயெனவுங் கயவரைக் கவிகளாற்றுதித்திந், நேமிசூழுலகிற் பயனொருசிறிது நேர்ந்தி

டாக்கொடியனேன்புரிந்த, தீமைகளனைத்தும்பொறுத்தருள்தில்லைத் திருச்சிற்றம்பலந்திகழ்தேவே. (சு)

தெண்ணிலாவணிந்தசெழுஞ்சடைக்கனியே தேவனேகருணைவாரிதியே, பெண்ணிலாவியபாகப் பெருமலையே பிஞ்ஞகாவெனத்தொழும்பெரியோர், கண்ணிணுற்கண்டுகளிக்கு நின்னடனைக் காட்சியைக் கடையனேற் கருளல், திண்ணமென் றடைந்தேன் கைவிடேல்தில்லைத் திருச்சிற்றம்பலந்திகழ்தேவே. (எ)

அன்று நின்னடியர் திருப்புகழுரைக்கு மன்பினுலருண்மொழிந்தேவர், ஒன்றிய மனந்தோ டுனைப்புகழ்ந்தேத்த வுலகெலாமென்றெடுத்து நவு, மன்றிடையமுதேயடியனேன்றனக்குமகிழ்ந்துநீயஞ்சலென்றருள்வாய், தென்றமிழ்மணக்கும் திருவளர்தில்லைத் திருச்சிற்றம்பலந்திகழ்தேவே. (அ)

அய்யகோவடியேன் செய்ததீவினைக ளளவிடற்கரியவோவைற்றுள், பொய்களோகளவோ கடுமையோவஞ்சப் புணர்ச்சியோ பிறர்பொருள்கவருஞ், செய்கையோவிவைகள் சிறியவோவனைத்துஞ் சிதறிடத்திருவருள்புரிவாய், செய்யனேமுக்கட் செல்வனேதில்லைத் திருச்சிற்றம்பலந்திகழ்தேவே. (கூ)

சங்கராகங்கைச் சடையனேகனக சபைதனிற்றுண்டவம்புரியும், அங்கணநின்றாளனுதினந்துதித்தின்படையவுநினதருளையாப், புங்கவர்தம்மைக் கனவிலுநாயேன் புகழ்ந்திடாவரமுமிங்கருள்வாய், திங்கள்சேர்மாடந் திகழ்திருத்தில்லைத் திருச்சிற்றம்பலந்திகழ்தேவே. (க0)

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

# சிவகாமசுந்தரி பதிகம்.



காப்பு - வஞ்சித்துறை.

தும்பிமுகத்தன் - செம்பதுமத்தாள்
நம்புகருத்தே - இம்பர்மதித்தே.

## நூல்.

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மலையினுக்கரையன் புரிந்தமாதவத்தின் மன்னியவருட்பெரு மணியே, சிலையினைச்சிலையாக்குனித்தவெம்பரனைச்சேர்ந்துவாழ்வுறுபசுங்கொடியே, நிலையிலவுலகவாழ்க்கையை நினைந்து நெஞ்சகம் வருந்தினேற்கருள்வாய், அலையெறிநடஞ்சூழ் தில்லையம்பதியி லமர்சிவகாமசுந்தரியே. (௧)

ஞானம்வேண்டிடினுங் கல்விவேண்டிடினு காசுபொருள்கள் வேண்டிடினுந், தானமென்றருள்வ மென்னவம்பட்டவாழ்நாளை நின்கண்களாற்படைத்தாய், ஈனனேனவற்றுளொரு சிறிதேனுமில்லனென்றேக்குறுகின்றேன், ஆனதாலவைதந்தருளுவாய் தில்லையமர்சிவகாமசுந்தரியே. (௨)

சச்சிதாநந்தத் துறுபொருளெமதுதனிப்பெருநாமமேயுற்றுள், மெச்சியசிவஞ்சத்தத்தம்யாமிடையின் மேவியகாமமாநந்தம், நிச்சயமிதனைத்துதிப்பவரொத்தாள் நேர்வமொன்றருள் பராபரையே, இச்சகத்தடியேற் கினிதருள்புரிவா யெழிற்சிவகாமசுந்தரியே. (௩)

தனிப்பெரும்புகலித் தலைவருக்கந்நாள் தந்தஞானத்தனி முதிற், பனித்துளிபளவேனுந்தராதொழியிற் பாவியேன்படுது ய ரொழியேன், அசிந்தமுற்றடியேனழிந்திடாவண்ணமன்னை நீயருள்செயவேண்டும், இனித்தசெந்தமிழின் மணங்கமழ் தில்லை யெழிற்சிவகாமசுந்தரியே. (௪)

அன்றமிழ்புனைந்து புரிகருணைவிட் டறங்களி லடியனேன் புரிந்து, ஒன்றியானவைகற் றதுமொன்றென் றுற்றதேதோவற்றதே தவறியேன், கன்றியானத்தேநாடுறிதருவேனைக்கைவிடினெங்ஙன முய்வேன், மன்றிடைநடனங்கண்டுளம்பூப்ப மகிழ்சிவகாமசுந் தரியே. (௫)

அவனவளதுவென் றுரைக்குமிவ்வுலகந் தவர்க்குமற்றவ ர்க்குநாடரிய, சிவனருண்மேனிகுழைவுறமகிழ்ந்தசெல்வி நீசிறி யனேன்புரிந்த, பவமதன் றொழிந்தென் னெஞ்சகங்குழையப் பண்ணலிற் கரியதோபகர்வாய், திவளொளி மாடமிலகு சீர்த் தில்லைத்திகழ் சிவகாமசுந்தரியே. (௬)

வஞ்சகன் தீயனுயிர்க்கொலைபுரியு மதியினன்மாயமேசரு தும், நெஞ்சகக்கொடிய வஞ்சியர்வழியே நின்றுழல்நீச னென் றெண்ணி, மைஞ்சனேன்றன்னைக் கைவிடிற்பிழைக்கும் வகையு ளதோவருள்புரிவாய், தஞ்சமென் றறவோர் வணங்குறுந்தில்லைத் தனிச்சிவகாமசுந்தரியே. (௭)

அடியனேன்புரிந்த கொடும்பிழையனைத்து மம்மநீயகற்றி யிங்கருளல், திடமெனவடைந்தேன் கைவிடின்வேறு திக்கிலையிக்

கணத்தருள்வாய், பொடியணிமேனிப் புண்ணியன்மனமகிழ் பூங்குயிலேபுராந்தகியே, மடலவிழ்சோலை சூழ்திருத்தில்லை மகிழ்சிவகாமசுந்தரியே. (அ)

அன்னைநின்னடிபாடிமலாவழுந்து மருத்தியினின்றகன்றொழிந்து, மின்னனையாகிப் புத்திரிசராய்ப்போய் மெலிந்துபன்முறையுழன்றலைசீந்தன், என்னையுமென்னைமனியென்றிருந்தவாறறியேனின்னருளபுரிவைமெய்ப்பற்றைடந்தேன், செந்நெலார்வயல்களசெறிதிருத்தில்லைத் திகழ்சிவகாமசுந்தரியே. (௬)

கற்பகக்கனியே கண்மணிதூண்மணியே கர்த்தனைப்பயர்ந்தமணியே, விற்பனர்புகழும் விமலையேயடியேன்வேறொருபோக்கிடங்காணேன், அற்பனென்றெண்ணியகற்றிடாதருள்தாளிணையினருளிலுக்கழகே, சிற்பரனடனமகிழ்தருதில்லைத் திகழ்சிவகாமசுந்தரியே. (௧0)

## மாணிக்கவாசக சுவாமிகள் துதி.

### அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பெருந்துறையிற்குருந்துறையும் பெருமான்பேரருள்பெறுப்பிறங்குஞானர், தருந்திருவாசகமுழைத்துப் புத்தரெலாமூரெனத்தயங்கமூகை, பொருந்துறுமோர் பூங்கொடிதன்வாய்மொழித்தரம்புகலப்புரிந்தெம்பெம்மான், அருந்திருத்தாண்டவமலர்த்தாளடைந்தருளும் பெருவாழ்வை யகத்துள்வைப்பாம்.

திருச்சிற்றம்பலம்.

